SHIVAJI
TAMIL WEEKLY

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

## கொட்டு முரசே!



மத்திய பிரதேசத்தில் சிந்த்வாரா என்ற இடத்தில் அமைக்கப் பட்டுள்ள பொருட்காட்சிச் சாலையில் சேகரித்து வைக்கப் பட்டுள்ள, பழங்குடி மக்களால் தயாரிக்கப்பட்ட கலை நுட்பப் பொருள்கள், கைவேலைப் பொருள்கள் முதலியவை அவர்களது வாழ்க்கையையும் கலாசாரத்தையும் நன்கு பிரதிபலிக்கின்றன. அவர்களால் பயன்படுத்தப் படுகிற பல்வேறு வகையான முரசுகளைப் படத்தில் காணலாம்.

## ஒரே இந்தியா

பூகோள ரீதியாகவும், கலாசார ரீதியாகவும் அரசியலில், பொருளாதார ரீதியாகவும் இந்தியநாடு ஒன்றுபட்டது. இந்த உண்மை நம் இதயங்களில் நன்கு உணரப்பட்டு நடைமுறை உண்மையாக்க வேண்டும். இதுவே இன்று தேவை.

இந்திய மக்களிடையே நிலவிய பழம் சித்தாந்தங்களும் பழக்கவழக்கங்களும் முரண்பட்டு இருக்கவில்லை. ஒருமைப்பாட்டை உடையனவாகவே இருந்தன.

சிவனும் பார்வதியும், யோக நிஷ்டைகளும், விலங்குகளிடத்து கருணை காட்டுதலும் நமக்குப் பொதுவான நாகரிகத்தின் பண்டைப் பொருள்களாகும். அன்று முதல் இன்று வரை என்ன மாறுதல்கள் ஏற்பட்டிருந்த போதிலும், இந்த ஆதார அடிப்படை நிலைந்து நின்றுள்ளது. இதற்குப் புறம்பான சக்திகள் சமூகத்தில் நுழைந்துள்ளன. இவை அவமானகரமானவை. இவற்றை சீக்கிரத்தில் அகற்ற வேண்டும்.

சமுதாயத்தின் தேவைகளுக்கேற்ப ஈடுகொடுக்கக் கூடிய ஆற்றல் உள்ளவரை நாகரிகம் நிலைத்து நிற்கும். நிலமைகளுக் கேற்ப வளைந்து கொடுக்கக் கூடியதாய் நமது நாகரிகம் இல்லையேல் அது என்றென்றும் வாழுவதென்பது இயலாது. ஒரு நல்லது என்னவெனில் நமது கலாசாரம் தன்னைத் தானே புதுப்பித்துக் கொண்டு என்றும் இளமை குன்றாது விளங்குவது தான். இந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர், கிறிஸ்துவர், ஆடவர், மகளிர் அனைவரும் கூடி நாம் யாவரும் ஒன்றென்ற உணர்வோடு வாழ்ந்து வருகிறோம்.

—ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன்

3—6—1962

# COIMBATORE BAGHIALAKSHMI BANK LIMITED.

## Balance Sheet as at 31 st DECEMBER, 1961.

| Corresponding figures 31—12—60 Rs. | CAPITAL AND LIABILITIES | DETAILS Rs. nP. | TOTAL Rs. nP. |
|---|---|---|---|
| | 1. CAPITAL : | | |
| 1,00,000 | Authorised & Issued 4,000 Shares of Rs. 25/- each ... | | 1,00,000 00 |
| | Subscribed Called and Paid up : 2,000 Shares of Rs. 25/- each fully called and paid ... | 50,000 00 | |
| Nil | Less : Calls in arrears ... | Nil | |
| 50,000 | | 50,000 00 | |
| Nil | Add : Forfeited shares ... | Nil | |
| | | | 50,000 00 |
| 52,842 | 2. RESERVE & OTHER FUNDS | | 57,964 77 |
| 10,04,182 | 3. DEPOSITS & OTHER ACCOUNTS : | | |
| | Fixed ... | 6,10,085 24 | |
| | Savings and monthly deposits Rs. 9,25,511 ... | 3,52,233 38 | |
| | Current and Contingency Rs. 78,671... | 69,702 78 | |
| | | | 10,32,021 40 |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES, AGENTS Etc: | | |
| Nil | (i) In India ... | Nil | |
| Nil | (ii) Outside India ... | Nil | |
| | PARTICULARS | | |
| Nil | (i) Secured ... | Nil | |
| Nil | (ii) Unsecured ... | Nil | |
| Nil | 5. BILLS PAYABLE : | Nil | |
| | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE AS PER CONTRA: | | |
| 362 | (i) in India ... | 402 00 | |
| Nil | (ii) outside India ... | Nil | |
| | | | 402 00 |
| | 7. OTHER LIABILITIES : | | |
| | Interest Accrued and received in advance 22,876 ... | 23,495 94 | |
| | Unpaid dividends 7,349 ... | 8,184 50 | |
| | Suspense 8,154 ... | 8,898 78 | |
| 49,329 | Provision for Income Tax 10,950 ... | 10,257 13 | |
| | | | 50,836 35 |
| Nil | 8. ACCEPTANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS AS PER CONTRA ... | Nil | |
| | 9. PROFIT AND LOSS : | | |
| | Profit as per last Balance sheet ... | 17,527 15 | |
| | Less: Appropriations : | | |

| Corresponding figures 31—12—60 Rs. | PROPERTY AND ASSETS | DETAILS Rs. nP. | TOTAL Rs. nP. |
|---|---|---|---|
| | 1. CASH : | | |
| 51,957 | On hand and with Reserve Bank and State Bank of India including foreign Currency Notes ... | | 77,736 94 |
| | 2 BALANCE WITH OTHER BANKS : | | |
| | In Current account | | |
| Nil | (i) In India ... | 15,740 63 | |
| | (ii) Outside India ... | Nil | |
| | In Fixed Deposit : | | |
| 1,57,564 | (i) In India Staff security deposits ... | 6,000 00 | |
| Nil | Call Deposits ... | 1,45,000 00 | |
| | (ii) Outside India ... | Nil | |
| | | | 1,66,740 63 |
| Nil | 3. MONEY AT CALL & SHORT NOTICE : | Nil | |
| | 4. INVESTMENTS : | | |
| | (i) Securities of the Governments ( Central and States) and other Trustee Securities, including Treasury Bills of Central and State Government valued at cost ... ( Market value : ... 2,09,825 45 ) | 2,11,604 35 | |
| | (ii) 3½% 10 years Treasury Savings Deposit Certificate at cost ... | Nil | |
| | (iii) Post Office National Savings Certificates ... | 10,000 00 | |
| Nil | (iv) Shares ... | Nil | |
| Nil | (v) Debentures ... | Nil | |
| Nil | (vi) Other Investments ... | Nil | |
| 1,72,692 | (viii) Gold ... | Nil | |
| | | | 2,21,604 35 |
| | 5. ADVACES : Other than bad and doubtful debts for which provision has been made to the satisfaction of the Auditor: | | |
| | I. Loans, Cash Credits, Overdrafts etc. | | |
| | (i) In India ... | 6,79,886 98 | |
| Nil | (ii) Outside India ... | Nil | |
| | II. Bills Discounted and purchased (excluding Treasury Bills of Central and State Governments) | | |
| Nil | (i) Payable in India ... | Nil | |
| Nil | (ii) Payable Outside India ... | Nil | |
| 7,56934 | Less: Provision for bad debts ... | Nil | |
| | | | 6,79,886 98 |
| | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION AS PER CONTRA | | |
| 362 | (i) Payable in India ... | 402 00 | |
| Nil | (ii) Payable outside India ... | Nil | |
| | | | 402 00 |
| Nil | 7. CONSTITUENTS LIABILITIES FOR ACCEPTANCES ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS PER CONTRA ... | Nil | |
| Nil | 8. PREMISES ... | Nil | |
| | 9. FURNITURE AND FIXTURES : | | |
| | at cost as per last Balance Sheet ... | 7,808 62 | |
| | Add. Additions during the year ... | Nil | |
| | | 7,808 62 | |
| 5,000 | Less: Depreciation written off to date ... | 3,108 62 | |
| | | | 4,700 00 |
| | 10. OTHER ASSETS INCLUDING SILVER : | | |
| | Interest accrued on Investments and advance ... | 9,985 46 | |
| | Incometax advance ... | 16,034 54 | |
| 25,300 | Other deposits ... | 30,746 00 | |
| 4,433 | Court costs ( doubtful ) ... | Nil | |
| | | | 56,766 00 |
| Nil | 11. NON-BANKING ASSETS ACQUIRED IN SATISFACTION OF CLAIMS ... | | Nil |
| | 12. PROFIT & LOSS ... | | Nil |
| 11,74,242 | TOTAL ... | | 12,07,836 90 |

# Coimbatore Baghialakshmi Bank Ltd.,

COIMBATORE.

## 26th Year

### Report by the Directors to Share-holders

Gentlemen,

1. The Balance Sheet of the Bank as on 31-12-61 together with the profit and Loss account for the year ending on that date is sent to you with the Auditor's Report.

2. The year's net profit after deducting all expenses comes to Rs. 16,612—38 nP. which is proposed to be distributed as under:—

(1) To divdend to share-holders @ Rs. 3—00 per share (@ 12% per annum) taxable subject to the permission by Reserve Bank ... Rs. 6,000—00

(b) To General Reserve ... Rs. 2,300—00

(c) To provision for Income-tax ... Rs. 7,500—00

(d) To donation to Sri Vasavi Kannikaparameswari Devasthanam ... Rs. 300—00

(e) To balance carried forward ... Rs. 512—38

Total ... Rs. 16,612—38

3. The affairs of the Bank are being properly conducted by holding board meetings whenever necessary.

(By order)



# உலகத் தலைவர்கள்

## ஆந்தரே மால்ரா

அண்மையில் அறுபது ஆண்டுகள் நிறைவு பெற்ற ஆந்தரே மால்ரா என்னும் பிரெஞ்சு இலக்கிய மேதை அவருடைய படைப்பாகிய நான்கு புதினங்களினால் உலகப்புகழ் எய்தினார். இப் புதினங்கள் அவருடைய 27வது வயதிலிருந்து 36வது வயதுக்குள் இயற்றப்பட்டன என்பது குறிப்பிடத் தக்கது. இவற்றுள் ''மனிதனின் விதி'' (1933) ''மனிதனின் நம்பிக்கை'' (1937) என்ற பெயர் கொண்ட இரண்டு நூல்கள் அவருக்கு உலகப் புகழைத் தேடித் தந்ததல்லாமல் அவைகளும் தற்காலத்து உலக இலக்கிய வரிசையில் தகுந்த இடம்பெற்றுள்ளன. இந்நூல்களில் உள்ள பாத்திரங்களும் அவர்களின் வரலாறுகளும் கற்பனை சிருஷ்டி அல்ல என்றும் அவைகள் ஆசிரியரின் சொந்த அனுபவங்கள் என்றும் கூறப்படுகிறது.

பாரிஸ் நகரில் பிறந்த இவர் இன்றும் முகத்தோற்றத்தில் தன் நிரம்பிய வயதின் சின்னங்கள் யாவையும் வெளிப்படுத்தவில்லை. இவருடைய பரந்த நெற்றி இவருக்கு ஒரு கவிஞனின் பொலிவைத் தருகிறது. இவருடைய இரு நீலக்கண்களும் பிரகாசமுடன் காட்சியளித்த போதிலும் பல ஆண்டுகளாக 'ஓய்வு' என்னும் சொல்லுக்குப் பொருள் காணாதவைகளாகத் தான் தோன்றுகின்றன. இவருடைய மூளை கருத்துக்களைத் திரட்டும் பொழுது இவ்விரு கண்களும் ஏதோ ஒன்றை ஊடுருவி நோக்குவதுபோல் தென்படும். திரட்டிய கருத்துக்களை உருக் கொடுத்து வாக்கியங்களாக அமைத்து இவர் எழுதும் பொழுது நீலக் கண்கள் இரண்டும் எதிரேயிருக்கும் மாசற்ற வெள்ளை சுவற்றின் மீது அடிக்கடி உலவி வரும். எழுதும் பொழுது பலகணிக்குப் புறம் காட்டி குரிச்சியின் மீது அமர்ந்து எழுதுவது இவருடைய சுபாவம்.

இவருடைய ஆயுட்காலத்தில் இவர் கண்ட அனுபவங்களை இவர் முகம் பிரதிபலிக்கவில்லை. இளமையிலேயே தான் வயது வந்த காலத்தில் எவ்வாறு உருவெடுக்க வேண்டும் என்பதை இவர் நிர்ணயித்து அவ்வாறே தன் பிற்காலத்தை அமைத்துக் கொண்டார். இவர் காட்டிலும், பாலைவனத்திலும் வசித்திருக்கிறார். புரட்சிகளிலும், போர்களிலும் பங்கு கொண்டிருக்கிறார். இவ்விதமான அனுபவங்கள் இவருக்கு மனோ திடத்தையும், தன்னம்பிக்கையையும் ஏராளமாகத் தேடித் தந்திருக்கின்றன.

மால்ரா தன் இருபத்திரண்டாவது வயதில் ஐரோப்பாவை விட்டுச் சென்று இந்தோ—சீனாவிற்கு வந்திறங்கி அங்கு அரசியலிலும், தொல்பொருள் ஆராய்ச்சியிலும் ஈடுபட்டார். பல காலமாக மண்ணுக்கடியில் மறைந்திருந்த விக்கிரகங்களை வெட்டி எடுத்து மறந்துபோன அவைகளின் சிறப்புகளுக்கு விளக்கம் கொடுத்தார். இந்நாட்டில் சதா போர் நிலவுவதைக் கண்டு இப்போரில் பங்கு கொள்ளுபவர்கள் பிற்காலத்து மக்களின் நலனுக்காகத் தங்கள் உயிர்களைத் தியாகம் செய்ய முன் வந்திருக்கிறார்கள், என்று உணர்ந்து உடனே கலைத் தொண்டைப் புறக்கணித்து விட்டு போரில் குதித்தார். சிருஷ்டி, செய்கை இவ்விரு துறைகளிலும் செயலாற்ற எங்கெங்கு வாய்ப்பு இருக்கிறதோ அவ்விடங்களில் தலைவரைக் காணாமலிருத்தல் அரிது.

ஐரோப்பாவில் ஃபாஸிஸத்தை எதிர்த்துப் போராடி மக்களுக்கு இக் கொள்கையின் மீது வெறுப்பு ஊட்டச் சமுதாய சேவை செய்தோர்களின் முன்னணியில் இடம் பெற்றவர் தலைவர் மால்ரா. ஸ்பெயின் தேசத்தில் ஸிவில் போர் மூண்ட பொழுது இவர் சர்வ தேச விமானப்படை ஒன்றை உருவாக்கி அதில் தீவிரமாகப் பங்கு கொண்டார்.

பின்னர் இப்படையில் கர்னல் பதவி இவருக்கு அளிக்கப்பட்டது. இரண்டாவது உலக மகாயுத்தம் ஆரம்பமானதும் இவர் பிரெஞ்சு ''டாங்கி'' படையில் சேர்ந்து போர் புரியும் பொழுது ஒரு நாள் விரோதிகளின் கையில் சிக்கி அவர்களால் கைது செய்யப்பட்டார். ஆயினும் தகுந்த சமயம் கிடைத்த பொழுது சிறையிலிருந்து தப்பி ஓடி விட்டார். 1945 ஆம் ஆண்டு இவருக்கு அமைச்சர் பதவி கிட்டியது. தனக்குப் பொருந்திய செய்தி இலாகா நிர்வாகத்தை இவர் ஏற்றுக் கொண்டார். ஆனால் 1946 ஆம் வருடம் ஜனவரி மாதம் ஜெனரல் டீகாஸ் ஓய்வு எடுத்துக்கொள்ளத் தீர்மானம் கொண்டதும் தானும் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். பின்னர் சற்றேறக்குறைய பன்னிரண்டு ஆண்டுகள் வரை சலிக்காமல் எழுதுகோலை ஊக்கமுடனும், உற்சாகமுடனும் ஏந்தி பல நூல்களை வெளியிட்டார். ஆனால் 1958 ஆம் ஆண்டு ஜூன் மாதம் அமைச்சர் அவையில் மீண்டும் கலந்து பணியாற்ற இவருக்கு ஓர் அழைப்பு வந்ததும் தன் எழுதுகோலுக்குச் சற்று ஓய்வு கொடுத்து விட்டுப் பதவியை ஏற்றார். இவருடைய திறமையையும் அனுபவத்தையும் ஒட்டி கலாச்சாரத் துறை நிர்வாகம் இவர் வசம் அளிக்கப்பட்டது. இன்றும் அத்துறையில் பணியைச் செவ்வனே ஆற்றுகிறார்.

இப்பொழுது அரசியல் நிர்வாகத்தில் கண்ணியமான இடம் பெற்றிருந்த போதிலும் இவர் இலக்கியத் துறையில் பெற்ற இடம் இவருக்கு அழியாப் புகழைத் தேடிக் கொடுத்திருக்கிறது. இவருடைய நடை தற்காலத்து பிரெஞ்சு இலக்கியத்தில் ஒரு உன்னத இடம் பெற்றுவிட்ட படியால் நாட்டில் இளம் எழுத்தாளர்கள் இப்பொழுது இவர் நடையைப் பின்பற்றுவது மிகவும் சகஜமாகி விட்டது. இவருடைய நூல்களில் மனோதத்துவம், மரணத்தையொட்டிய தத்துவம், இறுதியில் எல்லாம் தீமையிலேயே முடியும் என்ற கொள்கை முதலியன ததும்புகின்றன. தத்துவக் கருத்துக்கள் நிரம்பிய புதினங்களைத் தவிர இவர் கலை ஆராய்ச்சி நூல்கள் பலவற்றையும் இயற்றியுள்ளார். இவற்றிலும் மனிதப் பண்பின் சோக நிலையை அடிப்படையாகக் கொண்ட கருத்துக்கள் கொந்தளிக்கின்றன. மால்ரா மற்ற பேனா வீரர்களைப் போலல்லாமல் ஓர் போர் வீரருமாவார். மனிதனின் உயர்ந்த பண்பாட்டிற்காக இருமுனையில் செயலாற்றிய கௌரவம் இன்றைக்கு இவரையே சாரும்.

## நிதி உதவுக

பல ஆண்டுகளாகத் தம்முடைய சிறுகதைகளாலும், கவிதை கட்டுரைகளாலும், வளர்ந்து வரும் புதிய தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தி வரும் எழுத்தாளராகிய திரு. ந. பிச்சமூர்த்தியின் அறுபதாண்டு நிறைவு விழாவின்போது அவருக்கு ஒரு நிதி வழங்கவேண்டுமென்ற எண்ணத்துடன் ஒரு குழு, கலைமகள் அதிபர் திரு. நா. ராமரத்தினத்தைத் தலைவராகக் கொண்டு ஏற்பட்டிருப்பதை அன்பர்கள் அறிவார்கள். நிதிக்குப் பல அன்பர்கள் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

இதுவரையில் ரூ. 4,216-30 வசூலாகியிருக்கிறது. கணிசமான அளவில் அந்த நிதி இருக்கவேண்டுமென்பது குழுவினர் கருத்து. வரும் ஆகஸ்டு மாதத்தில் விழாவை நடத்தி நிதியை வழங்குவதென்று தீர்மானித்திருக்கிறார்கள்.

ஆதலின் இதுவரையில் இந்த நிதிக்குப் பணம் அனுப்பாமல் இருக்கும் அன்பர்கள் உடனே தங்கள் தங்களால் இயன்றதை, "திரு. நா. ராமரத்தினம், கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை-4" என்ற விலாசத்துக்கு அனுப்பியுதவ வேண்டுகிறோம்.

★

## புதிய பள்ளிகள்

தமிழ் நாட்டில் உயர்நிலைப்பள்ளிகள் வேண்டும் என்ற கோரிக்கை வலுத்துக் கொண்டிருப்பதால் இந்தக் கல்வி ஆண்டில் சுமார் 110 ஹை ஸ்கூல்கள் திறக்கப்படும். இவற்றுள் பல பெண்களுக்கான உயர்நிலைப் பள்ளிகளாக இருக்கும் என்று கல்வி அமைச்சர் திரு. பக்தவத்ஸலம் நிருபர் பேட்டியில் கூறினார்.

அதிகமாக உயர்நிலைப் பள்ளிகள் வேண்டும் என்ற கோரிக்கை கிராம வாசிகளிடமிருந்தே அதிகம் வருகிறது. செகண்டரி கல்வி விஷயத்தில் கிராம வாசிகளுக்கு ஏற்பட்டுள்ள விழிப்பு உணர்ச்சியையே இது காட்டுகிறது. கோவை, ராம்நகரில் ரங்கநாதபுரம் எக்ஸ்டென்ஷனில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி துவக்க விரைவில் உத்தரவு பிறப்பிக்கப்படும் என்று அமைச்சர் அறிவித்தார்.

★

## சொல்லும் செயலும்

கார் ஓட்டும் ஒவ்வொருவரும் மிக ஜாக்கிரதையாக ஓட்டவேண்டும். விபத்து ஏற்படாமல் தடுக்க வேண்டும் என்று மோட்டார் கிளப் ஒன்றில் பேசிவிட்டு காரில் புறப்பட்டுச் சென்றார் இத்தாலிய தபால் தந்தி இலாகா மந்திரி. காரையும் மந்திரியேதான் ஓட்டிச் சென்றார். எதிரே வந்த ஒரு காருடன் மந்திரியின் கார் மோதிக்கொண்டது. மந்திரி மாண்டுபோனார். காரிலிருந்த மற்ற இருவர் காயமடைந்தனர்.

★

## புகை பிடிக்காதே!

மக்கள் புகை பிடிப்பதை அறவே நிறுத்துவதற்காக பிரிட்டிஷ் சுகாதார இலாகா நவீன வழிகளைக் கையாளுகிறது. இதில் அச்சமூட்டுவதும் ஒன்றாகும்.

விளம்பரச் சீட்டுகளில் சவப்பெட்டி படத்தின் மேல் மார்பு புற்று நோயால் இறந்தவர்களின் புள்ளி விபரம் தரப்பட்டுள்ளது.

இருபதாண்டுகட்கு முன்பு 5,303 ஆக இருந்த இந்த மரணம் இன்று 25,288 ஆக அதிகரித்துள்ளது என்று அவ்விளம்பரம் தெரிவிக்கிறது.

சவப் பெட்டிகளின் கீழாக 'அதிக புகைப் பிடிப்பதால் அதிக ஆபத்து. இதனால் நீர் எச்சரிக்கப்படுகிறீர்' என்று எழுதப்பட்டுள்ளது.

★

## திருச்சியில் புதிய தொழிற்சாலை

திருச்சி மாவட்டத்தில் மேலும் ஒரு கனரக தொழிற்சாலை ஆரம்பம் ஆகவிருக்கிறது. ஏற்கனவே பாய்லர் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து வருவது தெரிந்ததே.

தனியார் துறையில் இந்தியாவிலேயே முதன் முதலாக ஜிப்சம் அட்டை உற்பத்தித் தொழிலை நிறுவி அதை நடத்துவதற்கான இடத்தை தெரிந்தெடுப்பதில் என்ஜினீயர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இத்தொழில் திருச்சி ஜில்லாவில் ஏற்படக்கூடிய இரண்டாவது கனரகத் தொழிலாகவிருக்கும்.

ஒரு கோடு ரூபாய் அதிகாரம் பெற்ற மூலதனமும் ரூபாய் 40 லட்சம் நடைமுதல் மூலதனமும் வைத்து இத்தொழிலைத் துவக்க உத்தேசித்திருக்கிறார்கள்.

ஜப்பானிய-இந்தியக் கூட்டில் இயங்க இருக்கும் இத்தொழிலை ஆரம்பிக்க வேண்டுமென்று திட்டமிட்டுள்ள டி. எஸ். சொக்கலிங்கமும், கொடுமுடி ராஜகோபாலனும் ஜூன் 7-ந் தேதி இதற்காக ஜப்பான் போகிறார்கள்.

★

## இருண்ட நேரம்!

அமெரிக்கா அறிவித்திருக்கும் ஆகாயத்தில் மிக உயரத்தில் அணு சோதனை செய்யும் நேரம் மனித குலத்திற்கே இருண்ட நேரமாகும். இது நாகரிக உலகிற்கு விடப்பட்ட சவால் ஆகும் என்று பிரிட்டிஷ் வான மண்டல ஆராய்ச்சி ஸ்தாபன டைரக்டர். பெர்னாட்லாவல் என்பவர் கண்டனம் தெரிவித்துள்ளார்.

★

# பாம்பு கடித்தால்...

— க. சிற்றம்பலம்

'பாம்பென்ருல் படையும் நடுங்கும்' என்ற முதுமொழி பாம்பின் விஷம் எவ்வளவு கொடியது என்பதை நமக்கு எடுத்துக்காட்டுகிறது. பாம்பு கடித்தால் உடனே என்ன செய்ய வேண்டும் என்பது பலருக்குத் தெரியாது இதனுல் விஷம் விரைவில் மனித உடலில் பரவி ஆபத்து அதிகமாகின்றது.

ஆகவே பாம்பு கடித்தால் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை சிறிதளவாவது ஒவ்வொருவரும் அறிந்திருப்பது அவசியமாகும். பாம்பு தீண்டிவிட்டால் நாம் உடன் செய்ய வேண்டிய முதலுதவிகள் என்ன என்பதை பிரபல விஷக்கடி வைத்தியர் மூலம் அறிந்து கொள்வோம்.

பாம்பு போன்ற விஷ ஜந்துக்கள் தீண்டிவிட்டால் உடனே என்ன செய்யவேண்டும் என்பதை தெரிந்து வைத்திராததால் பல உயிர் ஆபத்துக்கள் ஏற்பட்டு விடுகின்றன. முறையான சிகிச்சை அளிக்காது தவருன சிகிச்சை அளிப்பதாலும் பல சந்தர்ப்பங்களில் நன்மைக்குப் பதில் கெடுதியே விளைவிக்கின்றது. பாம்பு போன்ற விஷ ஜந்து தீண்டிவிட்டால் நாம் உடன் செய்ய வேண்டியதென்ன என்பதை நாம் தெரிந்து வைத்திருந்தால் ஓரளவு அபாயத்தைத் தடுக்க உதவுவதாக இருக்குமல்லவா.

(1) கடியுண்ட இடத்துக்கு மேல் நன்ருக இறுக்கமாகக் கட்டுதல். கட்டுக்கு மேல் கட்டுக்களும் கட்டலாம். ஆனுல் மூன்று கட்டுக்கள் போதியதாகும். இப்படிக் கட்டுவதால் விஷம் தீண்டப்பட்ட இடத்துக்கும், மற்ற இடங்களுக்கும் இரத்தத் தொடர்பைக்குறைப்பதாகும். விஷம் கலந்த இரத்தம் நல்ல இரத்தத்துடன் கலப்பதால் இரத்தாசியத்தை தாக்க வழியாகும்.

(2) விஷம் தீண்டப்பட்ட இடத்தை தண்ணீரால் கழுவுதல் வேண்டும். சில சந்தர்ப்பங்களில் பாம்பு தீண்டும்போது தீண்டுமிடத்தில் காயம் ஏற்படாது, விஷம் கொட்டப்பட்டிருத்தலும் கூடும். ஆனுல் கொட்டப்பட்ட விஷம் சில சந்தர்ப்பங்களில் காயங்கள் வழியாக உடலைத் தாக்காதவாறு கழுவுவதால் விஷம் நீங்கும்

(3) விஷம் தீண்டப்பட்ட இடத்தை நன்ருகக் கழுவிய பின்னர் தான் ஒரு சிறு கத்தியால் அந்த இடத்தைக் கீறுதல் வேண்டும். காரணம் பாம்பின் பற்கள் நான்கும் நான்கு விதமானதாக அமைந்துள்ளது. முதலாம் பல் மிகவும் கூரானது பல் துவாரம் சிறியது, இரண்டாம் பல் முதலாம் பல்லிலும் உயரம்குறைந்தது அதனிலும் துவாரம் பெரியது, மூன்ரும் பல் இரண்டாவதிலும் உயரம் குறைந்தது, துவாரம் பெரியது, நாலாம் பல் மூன்ருவதிலும் உயரம் குறைந்தது, ஆனுல் துவாரம் பெரியது. இந்த அமைப்பிலுள்ள பற்களிலிருந்து வரும் விஷங்கள் சில சந்தர்ப்பங்களில் பல் தாக்கப்படாமல் விஷம் கொட்டப்பட்டிருக்கும். அப்பொழுது நாம் கழுவாமல் கீறி முதலுதவி செய்யும்போது கீறிய காயம் வழியாகக் கொட்டப்பட்ட விஷம் உடலில் விரைவில் செல்ல நேரிடும். ஆகையால் தான் எப்பொழுது கீறுதல் நலமென்பதை நாம் அறிந்திருக்க வேண்டும். சிலர் கீறுவதென்று வெட்டியும் விடுகிருர்கள் இச்செயல் ஆபத்தானதாகும். சிலர் இரத்தோட்ட நரம்புகளையும் வெட்டிவிடுவார்கள். ஆகையால் சிறு கூரான கத்தியினுல் X போல் கீறி இரத்தத்தைப் பிதுக்கி எடுப்பதுதான் நலமாகும்.

(4) விஷம் தீண்டியவனுக்கு உடனே சுத்தமான வேப்பெண்

( 7-ம் பக்கம் பார்க்க )






சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

| மலர் 27 | 3—6—1962 | வாரம் 29 |
|---|---|---|

# கல்வித் தரம்

சென்ற பதினைந்து இருபது ஆண்டுகளாகத் தமிழ் நாட்டின் கல்வித்தரம் தாழ்ந்து உருக்குலைந்து போய் வந்திருப்பதை நாம் கண்டு வந்திருக்கிறோம். பாடத் திட்டங்களிலும் போதனா மொழி, ஆங்கிலம் பற்றிய ஏற்பாடுகளிலும் எண்ணற்ற மாற்றங்கள் ஏற்பட்டு ஒவ்வொன்றும் வெறும் பரிசோதனையாகவே முடிந்து விட்டதனால் ஏற்பட்ட கல்வி நஷ்டம் மிகப் பெரிது. குறிப்பாக ஆங்கிலப் பயிற்சி விஷயத்தில் மேற்கொள்ளப்பட்ட பரிசோதனைகள் நம் நாட்டில் இந்தத் தலைமுறை இளைஞர், மாணவர்களின் ஆங்கில அறிவைச் சூன்ய நிலைக்குக் கொண்டு வந்து விட்டதென்றே கூறலாம்.

தாய்மொழியைப் போதனா மொழியாக்கி உலக ஞானம் அனைத்தும் தாய்மொழியில் கிடைக்குமாறு செய்ய வேண்டுமென்ற ஆவலும் தீவிர நடவடிக்கையும் ஒரு சுதந்திர நாட்டில் விரும்பி வரவேற்கத் தக்கதாகும். ஆனால் ஆங்கிலத்தின் இன்றியமையாமையை நாட்டுணர்ச்சியின் பேரால் மறுப்பதோ மறைப்பதோ நமக்கு எள்ளளவும் பயன் தராது. பற்பல மாறுதல்களுக்குப் பிறகு மீண்டும் மாணவர்களுக்கு ஆரம்பப் பாடசாலைகளிலிருந்தே ஆங்கிலம் கற்பிக்க வேண்டுமென்ற முடிவுக்கு அரசினர் வந்திருப்பதைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

அத்துடன் பெண் கல்வியிலும் நமது அரசினர் புதிய உத்திகளைக் கையாள முன் வந்திருப்பது வரவேற்கத் தக்கது. 20 வயது வந்த பெண்கள் நேரிடையாகவே உயர் நிலை இறுதி வகுப்புப் பரிட்சை கொடுக்கவும், எட்டாம் வகுப்பு (இடை நிலை)ப் பரிட்சையில் ஆங்கில பாடத்தில் தவறியவர்கள் மீண்டும் பரிட்சை எழுதவும் வாய்ப்பளிக்க சர்க்கார் முன் வந்துள்ளனர்.

பள்ளிக் கூடங்களில் இட நெருக்கடி என்பது அளவுக்கு மீறிப் போய்க்கொண்டிருக்கிறது. பெரிய பெரிய கட்டடங்களை வற்புறுத்திக் கொண்டிராமல் குரு குலங்கள் போல் சொற்ப வசதிகளுள்ள கூரைக் கட்டடங்களில் உயர் நிலைப் பள்ளிகளை நடத்தும் திட்டத்தையும் சர்க்கார் ஆராய்ந்து அங்கீகரிக்க முன்வந்தால் பெருகி வரும் மக்கள் தொகைக்கு வேண்டிய கல்வியை வழங்க முடியாது. எனவே இந்தத் துறையிலும் அரசாங்க கவனம் தீவிரமாகத் திரும்ப வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

★

# கண்ணோட்டம்

— ரா. நா.

★ ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன்

★ சேலம் விஜயராகவாச்சாரியார்

சென்னை மாநகரம் சென்ற இரண்டு நாட்களாகத் திருவிழாக் கோலம் அளிக்கிறது. காரணம் நமது ஜனாதிபதியின் விஜயம் தான். மக்கள் தத்தம் இல்லத்திற்கு விருந்தினர் வந்தது போல் மகிழ்கிறார்கள். ஜனாதிபதியும் மக்களின் உள்ளங்களுக்கு விருந்தளித்து நிரப்பி வருகின்றார்கள்.

சென்னை கார்பொரேஷன் தி. மு. க. வின் ஆட்சியில் உள்ள கார்பொரேஷன்—டாக்டர் ராதாகிருஷ்ணனை உபசரிப்பதன மூலம் தன்னை கௌரவித்துக் கொண்டது. ‘இன்று நான் பெறும் பெயருக்கும் புகழுக்கும் அஸ்திவாரம் சென்னை மாநகரில் தான் இடப்பட்டது. இங்கு தான் நான் பி. ஏ., எம். ஏ. பட்டம் பெற்றேன்’ என்று அவர் உருக்கமாகத் தெரிவிக்கையில் சபையினர் கரகோஷ ஆரவாரம் செய்தனர். இங்கு தான் நாட்டுப் பற்றுடன் உலகப்பற்றும் உலக சமாதானப்பற்றும் மக்கள் பெற வேண்டும் என ஜனாதிபதி உபதேசம் செய்தார்.

ஆந்திர மகிள சபையின் வெள்ளி விழாவில் தலைமை தாங்கி விழாவை ஆரம்பித்து வைத்தார். எல்லையின்றி பணமும் பாண்டித்யமும் பெற்ற பலர் ‘ஆன்மிக அறியாமை’ நிறைந்தவர்களாயிருக்கின்றனர் என சுட்டிக் காட்டினார் மகிள சபா சொற்பொழிவில். கல்வி என்பது அறிவாளிகளை உற்பத்தி செய்யும் சாதனம் மட்டுமல்ல மனிதாபிமானம் உள்ளவர்களைத் தயார் செய்யும் சாதனமாயிருக்க வேண்டும் என்றும் உபதேசித்தார். பொருளாதார சமத்துவம் அளிக்கும் சோஷலிஸத்திற்காகப் பாடுபட்டால் மட்டும் போதாது, மனிதன் பிற மனிதர்களைச்சமமாக பாவிக்கும் பக்குவம் பெற வேண்டும் என வற்புறுத்தினார். ஜனாதிபதியின் சென்னை விஜயத்தினால் சென்னை மக்கள் மன நிறைவு பெற்று புது மனிதர்களாக மாறி விட்டனர் என்றே கூறலம். டாக்டர் ராதாகிருஷ்ணனின் பதவிக் காலத்தில் பாரத நாடே புது நாடாக மாறி விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

°° °°

நமது பெரியார்களின் வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்வதன் மூலம் அவர்களது சந்ததிகள் தங்கள் வாழ்க்கையைப் புனிதமாக்கிக் கொள்ளலாம். இம் மாதம் (ஜுன்)5ம் தேதி இந்தியாவின் முது கிழவர் சேலம் விஜயராகவாசாரியாரின் பிறந்த தின விழா வருகிறது, 1852ம் ஆண்டு ஜூன் 5ம் தேதி அன்னார் இப் புண்ய பூமியில் ஜனித்தார். 1944ம் ஆண்டு ஏப்ரல் 19ம் தேதி அமரவாழ்வெய்தினார்.

அவர் வாழ்ந்த 92 ஆண்டுகளில் நாட்டிற்கு பல்வேறு துறைகளில் வியக்கத்தக்க முறையில் தொண்டு புரிந்தார். இந்திய சுதந்திரச் சிற்பிகளில் தலை சிறந்தவர் திரு. ஆச்சாரியார். அவரது வாழக்கையில் ஒவ்வொரு கட்டத்திலும் அவர் செய்த சேவை தற்கால இளைஞர்களுக்கு ஆதர்சமளிக்கத்தக்கது.

தந்தையின் ஆக்ஞைப் படி சிறு வயதில் வேத அத்யயனம் செய்து வடமொழியில் பாண்டித்யம் பெற்றார். இந்த நிலையில் ஆங்கிலக் கல்வி பயில வேண்டும் என்கிற ஆர்வம் தோன்றிற்று.

இதற்குத் தந்தை இடம் கொடுக்கமாட்டார் எனத் தெரிந்தும் அவருக்குத் தெரியாமல் வீட்டைவிட்டு வெளியேறித் தம் உறவினர் ஒருவரின் உதவி கொண்டு கல்வி பயின்றார். சர்வகலாசாலைப் பட்டம் பெறும் ஒவ்வொரு தேர்விலும் பரிசுகள் பெற்றார். கல்லூரி ஆசிரியர்களின் மதிப்பையும் அபிமானத்தையும் பெற்றார். முதலில் மங்களூரில் ஆசிரியராகத்தான் வாழ்க்கையைத் தொடங்கினார். ஆசிரியராக வந்த முதல் நாளே தமது மேஜை மீதிருந்த பிரம்பை ஒடித்தெறிந்தார். அடித்து அறிவைப் புகட்டுவதில் ஆச்சாரியாருக்கு நம்பிக்கையில்லை. இச்செயலால் மாணவர்கள் உள்ளத்தில் இடம் பெற்றார். வெள்ளையரிடம் சுய மரியாதையைக் காத்துப் பணி புரிய முடியாது என அறிந்து ஆசிரியப் பதவியை விட்டு வெளியேறுகையில் மாணவர்கள் பள்ளியை விட்டு ரயில் நிலையத்திற்கு வந்து தங்கள் ஆசிரியரை வழியனுப்பினர்.

மதுராந்தகத்தில் பிறந்த ஆச்சாரியார் புது இடமான சேலத்திற்கு வந்து முதல் கிரேட் வக்கீலாகத் தொழில் நடத்தத் தொடங்கினார். இத்துறையிலும் ஆங்கில பாரிஸ்டர்கள் பாராட்டும் அளவிற்கு விரைவில் தொழிலில் முன்னேற்றம் கண்டார். வக்கீலாக இருக்கையிலும் சுயமதிப்பைக் காப்பாற்றத் தவறியதில்லை. ஒரு நீதிபதி சகவக்கீலை அவமரியாதையாக நடத்தியதைக் கண்டு சகியாமல் நீதிபதி மன்னிப்புக் கோரும் வரையில் தன் வழக்கையே வாதாட மறுத்தார்.

1883ம் ஆண்டில் சேலத்தில் ஹிந்து முஸ்லீம் கலவரம் நடந்தது. அதில் சம்பந்தப்பட்ட ஹிந்து குற்றவாளிகளுக்கு திரு. ஆச்சாரியார் உதவி புரிந்தார். இவரே கலகத்திற்கு உடந்தையாயிருந்தார் என இவர் மீது குற்றம் சாட்டி வழக்குத் தொடர்ந்து பத்து வருடம் தீவாந்திர சிட்சை அளித்தனர். உயர் நீதிமன்றத்திற்கு அப்பீல் செய்து திரு. ஆச்சாரியாருக்காக அக்காலத்தில் புகழ் பெற்ற எர்ட்லி நார்ட்டன் எனும் ஆங்கில பாரிஸ்டர் வாதாடினார். ஆச்சாரியார் விடுதலையடைந்தார். அதனுடன் அவர் வாளாவிருந்து விடவில்லை. தம்முடன் தண்டனை பெற்றவர்களுக்காக வழக்காடி அவர்களையும் விடுவித்தார். தமக்கெதிராகப் பொய்ச்சாட்சியம் கூறியவர்கள் மீது வழக்குத் தொடர்ந்து அவர்களுக்குத் தண்டனை விதிக்கச்செய்தார். இந்த வழக்கின் விளைவாக ஆச்சாரியாரை முனிசிபல் கவுன்சிலர் பதவியிலிருந்து அரசாங்கம் நீக்கிற்று. இந்தியா மந்திரி மீது வழக்குத் தொடர்ந்து பதவியை மீண்டும் பெற்று நஷ்ட ஈடும் பெற்றார்.

அரசியல் துறையில் ஆச்சாரியார் ஆற்றிய பணி யாவற்றிற்கும் சிகரம் போன்றது. காங்கிரஸ் மகா சபையின் ஸ்தாபகர்களில் ஆச்சாரியார் ஒருவர். காங்கிரஸ் தோன்றக் காரணமாயிருந்தவர் அக்டேவியன் ஹ்யூமின் நன் மதிப்பைப் பெற்றவர். 1906ல் சூரத்தில் காங்கிரஸ் பிளவு ஏற்பட்டதிலிருந்து 1914 வரை காங்கிரஸுக்கு ஆச்சாரியார் செல்லவில்லை. ஏனெனில் லோகமான்ய திலகரின் கருத்துகளில் ஈடுபாடுடையவர், தீவிரவாதி. 1920ம் ஆண்டில் நாகபுரியில் நடந்த காங்கிரஸ் மகா சபைக்கு திரு. ஆச்சாரியார் தலைமை வகித்தார். இந்த காங்கிரஸில்தான் ஒத்துழையாமை திட்டம் அங்கீகரிக்கப்பட்டது. இதற்கு முன்பு இருதடவைகள் காங்கிரஸ் அதிபர்பதவி ஆச்சாரியாரை நாடி வந்தது. தென்னிந்தியர்களில் சிலர் அவரை ஆதரிக்காததனால் முதல் தடவை காங்கிரஸ் அதிபர் பதவியை ஏற்கவில்லை. இரண்டாவது தடவை பண்டித மாளவியாஜிக்காக ஆச்சாரியார் விலகிக்கொண்டார். பாஞ்சால படுகொலை, கிலாபத் அநீதி இரண்டிற்கும் பரிகாரம் காண ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பிப்பதாக காந்திஜி பூர்வ பீடிகையில் கூறியிருந்தார். ஆனால் சுயராஜ்யம் பெறவே ஒத்துழையாமை இயக்கம் தொடங்கப்படுகிறது எனக் குறிப்பிட வேண்டும் என ஆச்சாரியார் கூறினார். மகாத்மாஜி இதற்கு தயக்கமின்றி இணங்கினார். காங்கிரஸ் அமைப்பு விதிகள் தயாரித்தவர்களில் ஆச்சாரியார் ஒருவர். ஜீவாதார உரிமைகள் அரசியலமைப்பில் இடம் பெற வேண்டும் என முதன் முதலில் வற்புறுத்தியவர் ஆச்சாரியார்தான். ஒத்துழையாமைதிட்டத்தில் சட்ட சபை பகிஷ்காரம், கல்லூரி பகிஷ்காரம் இரண்டையும் ஆதியில் திரு. ஆச்சாரியார் எதிர்த்தாலும் திட்டம் நிறைவேறிய பின் அதை ஆதரித்து நாடெங்கும் பிரசாரம் செய்து, பிரபலஸ்தர்கள் எதிர்ப்புக்கு சவால் கொடுத்து நின்றது திரு. ஆச்சாரியாரின் ஸ்தாபன விசுவாசத்திற்கு எடுத்துக் காட்டு.

முதலில் சென்னை சட்ட சபையிலும் பிறகு மத்திய சட்ட சபையிலும் திரு. ஆச்சாரியார் ஆற்றிய பணியைப் பற்றி அக்கால அரசாங்கப் பிரதிநிதியான ஸர் கைபிளிட்வுட்வில்ஸன் 'ஆச்சாரியார் சட்டசபையில் இருக்கிறார் என்றாலே அரசாங்கப் பிரதிநிதிகளுக்கு கலக்கம்தான். அவர்கள் விழிப்புடனிருக்க வேண்டும்.' என்று கூறியுள்ளனர். அக்கால ராஜப் பிரதிநிதியாயிருந்த ஹார்டிஞ்ச் பிரபு ஆச்சாரியார் மத்திய சட்ட சபைக்கு மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட வில்லை என்பதை அறிந்ததும் தமது வருத்தத்தை ஆச்சாரியாருக்குத் தெரிவித்து எழுதியுள்ளார்.

ஆஜானுபாகுவான தோற்றம், துல்லியமான வெண் தலைப்பாகை, முழங்காலுக்கு எட்டும் நீண்ட சட்டை, வெண்மையான நீண்ட அங்கவஸ்திரம், முகத்தில் சுடர் வீசும் திருநாமம். இவ்வளவு எடுப்பான தோற்றமுள்ள ஆச்சாரியாரை ஆயிர மாயிரம் மக்கள் உள்ள கூட்டத்தில் கூட சுலபமாகக் கண்டு பிடித்து விடலாம். ஆகிருதியிலும் ஆக்கப்பணியிலும், தீரத்திலும், நேர்மையிலும் நாட்டின் தலைவர்கள் நன் மதிப்பைப் பெற்றவரிலும் ஈடு இணையற்ற திரு. ஆச்சாரியார் சுதந்திர இந்தியாவின் வரலாற்றில் அழியாத இடம் பெற்றுத் திகழ்கிறார். அவரது தூய வாழ்க்கை நமக்கு ஆதர்சமளிக்குமாக! ❋

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

ணெய் இரண்டவுன்ஸ் அளவாகக் கொடுத்தல் நலமாகும். வேப்பெண்ணெயில் விஷத்தைச் சுத்திகரிக்கும் தன்மை இருப்பதை வைத்தியர்கள் உணருவார்கள். வேப்பெண்ணெய் கிருமிகளைக் கொல்லுந்தன்மையில் இயற்கை உதவிய சிறந்த மருந்தாகும் என்றால் மிகையாகாது.

பாம்பு தீண்டியவுடன் பலரும் பலவிதமான வைத்திய முறைகளைக் கூறுவார்கள். ஆனால் அவற்றையெல்லாம் ஆராய்ந்து செய்தல் தான் சாலச்சிறந்ததாகும். சிலர் பாம்பு விஷத்தால் துன்பமில்லாது, வைத்திய முறையில் வீணாக நோயைக் கூட்டிக் கொள்வதை எனது அனுபவ வாயிலாக நான் கண்டிருக்கிறேன். உதாரணமாகச் சென்ற மாதம் ஒருவருக்கு புலிமுகச் சிலந்தி கடித்தது. சிலந்தியும் பெரியது. அவர்

கடிவேதனையால் துடியாகத் துடித்தார். அயலவர் ஒருவர், கடித்த சிலந்தியைப் பிடித்து நெருப்பில் சுட்டு, கடிவாயில் வைத்துக் கட்டும்படி கூறினாராம். உடனே அவர்கள் அப்படியே செய்தார்கள். ஆனால் விஷம் கடிவாயினூடாக அதிகமாகப் பரவி, அறிவு கலங்கிய நிலையில் என் வீட்டுக்கு எடுத்து வரப்பட்டார். "கேள்விச் செவியன் ஊரைக் கெடுத்தானும்" என்ற பழமொழி போல நடவாது எது தக்க சிகிச்சை முறையென ஆராய்ந்து செய்தால் தான் சிறந்ததாகும். சிலர் பாம்பு கடித்தவுடன் மூத்திரத்தைப் பருகுகின்றார்கள். இவையெல்லாம் விஷத்தை நீக்கக் கூடியவையல்ல, கழிவுப்பொருளான மூத்திரம் தேகத்துக்குகந்ததல்ல. ஆகவே சிந்தித்துச் செயல் புரிவதுதான் சிறப்புடையது. விரைவில் விஷக்கடி வைத்தியரை நாடிச் செல்லல் தான் நன்மை அளிப்பதாகவிருக்கும். அநேகர் விஷக்கடியை அலட்சியம் செய்வதாலும், தாமதம் செய்வதாலும், வீணே இறக்கவேண்டி நேரிடுகிறது.

பாம்பின் விஷம் மஞ்சள் நிறமுள்ள திராவக பதார்த்தமாக அமைந்துள்ளது. இது சுவாத்திய நிலைக்கேற்ப மாறுப்பட்டதாகவும் காணப்படும். இந்த விஷயத்தில் மூன்றுவிதமான தன்மைகள் அமைந்திருக்கின்றன. ஒன்று முள்ளந்தண்டு வழியாகச் சென்று மூளையையும், அதன் நரம்புகளையும் பாதிக்கும். மற்றொன்று இரத்தத்திலுள்ள சீவ அணுக்களைக் கொல்லும், மற்றொன்று இரத்தத்தை உறையச் செய்து இரத்த ஓட்டத்தைத் தடைப்படச் செய்யும். இச்செயல்களைச் செய்யும் வன்மை எல்லாவிதப் பாம்புகளின் விஷத்திலும் அடங்கியிருந்தாலும் பாம்பின் வகைக்கேற்ப விஷ ஜந்துக்கள் குறைந்தும் கூடியும் இருக்கும். அதற்கேற்பத் தான் மயக்கம், வீக்கம், வேதனை, கால் கை உழைவு, விறைப்பு, கண்பார்வையற்ற நிலை, தலைப்பாரம் முதலிய அறிகுறிகள் காணப்படுவதாகும்.

நாகப்பாம்பின் விஷம் உடனே மூளையைப் பாதிக்கும் தன்மையில் அமைந்துள்ளது. தக்க மருத்துவமின்றேல் நான்கு அல்லது ஐந்து மணி நேரத்தில் மரணம் ஏற்படும். ஆகவே பாம்பின் வகைகளுக்கேற்ப விஷத்தின் வேகம் மனித உடலை தாக்குகின்றது எனலாம்.

இரத்தப்புடையன் விஷத்தில் இரத்தத்தைப் பாதிக்கும் விஷம் ஓங்கி நிற்பதால் இரத்தம் தோற்புரவைகள் மூலமும், மற்றும் உடலின் ஒன்பது வாசல்கள் வழியாகவும் விஷம் கலந்த இரத்தம் சென்று மரணத்தை விளைவிக்கும் ஆனால் இரத்தத்தைச் சுத்திகரிக்கும் மருந்தினால் மரணத்தைத் தடுக்க முடியும். சுருட்டைப் பாம்பு, விரியன் பாம்புகள் முதலியன கடித்தால் இரத்தக் குழாய்களில் இரத்தம் கட்டிபட்டு, இரத்தோட்டம் தடைப் பட்டு மரணம் சம்பவிக்கும். ஆகவே வைத்தியர்களும் விஷத்தின் அளவறிந்து தான் சிகிச்சை முறைகளை மேற்கொள்ள வேண்டும்.

விஷப்பாம்பு மக்களைத் தாக்கினால், அதன் விஷம் மரணம் உண்டுபண்ணத் தக்க அளவுக்குச் சிலருக்குத் தேகத்தில் செல்வதில்லை. காரணம் பாமபு படம் எடுத்து ஆத்திரத்துடன் கடிக்கும் போது நச்சுப்பையிலுள்ள விஷம் பல வழியாக வந்தாலும், பல்லை மூடியுள்ள சவ்வு நீங்கப்படாதிருப்பதால் விஷம் கொட்டப்படாமல் விடுவதுமுண்டு. ஆனால் சிலர் பயத்தால் உடனே மயங்கி விடுவார்கள். ஆகவே பலர் பயத்தின் காரணமாக தங்களைத் தாமே மாய்த்துக் கொள்கின்றார்கள்.

பாம்புகளில் பல வகை இனங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வகைப் பாம்புக்கும், குணத்திலும், விஷத்திலும் செயலிலும், புள்ளிகளிலும், ஆடும் வகைகளிலும் வித்தியாசம் இருக்கின்றன.

ஆடும் பாம்புகள் எல்லாம் விஷமுடையவை எனப் பொதுவாகக் கொள்ளலாம். இவற்றை அறிவது வெகு சுலபமாகும். நாகங்கள் சிறு சத்தம் கேட்டதும் ஆடத்தொடங்கிவிடும். நாகங்கள் படம் விரித்தாடும் போது நாகங்களுக்கு நாகங்கள் வித்தியாசமான குறிகள் படத்தில் தென்படும். சங்கு சக்கரம், சூலம் போன்றதாகப் படம் அமைந்திருக்கும்.

படம் எடுத்து ஆடாத பாம்புகளில் அநேக விஷப்பாம்புகளுண்டு என்பது யாவரும் அறிந்ததே. இவைகளில் பல சாதிகளாக அமைந்துள்ளன. விரியன் வகைகள், சரை வகைகள், சுருட்டை வகைகள், புடையன் வகைகள், மண்ணுணிப் பாம்பு வகைகள், சுவர் வளையன்கள், கோடாலிப் பாம்புகள், பச்சைப் பாம்புகள் இன்னும் எத்தனையோ இன வகை வகைகள் உண்டு. ஆனால் அவற்றின் விஷத்தன்மைகள் வகைக்கு ஏற்றதாக அமைந்துள்ளது.

சாரைப் பாம்பு, நீர்கோத்தை (வயல் கோவியன்) பச்சைப்பாம்புகள் இவற்றுக்கு விஷமில்லையெனலாம். மற்ற வகைப் பாம்புகளுக்கு விஷம் உண்டென்று தான் கூற முடியும். பாம்புகளை, நிறத்தைக் கொண்டு இன்னவகைப் பாம்பு என்று கூறமுடியாது. காரணம் இடத்திற்கேற்ப பாம்பின் நிறம் மாற்றமடையும். இது இயற்கை செய்யும் அற்புதமாகும்.

தரைப் பாம்புகளைப் பற்றி அறிந்தோம், இனி நீர்ப்பாம்புகளைப் பற்றி ஆராய்வோம். தரையில் பாம்புகள் எப்படி வசிக்கின்றனவோ, அதே போன்று கடலிலும் பாம்புகள் வசிக்கின்றன. அவையிலும் கொடிய விஷமுடையன, விஷமற்றன எனப் பகுக்கலாம்.

இவையின் வால் தட்டையாகவும், நீரில் நீந்தக் கூடியதான அமைப்பாகவும் அவற்றின் உடல் ஆக்கப்பட்டதாக இருக்கின்றது. இவற்றின் உணவுகள் மீன்கள், கடலில் வாழும் பூச்சிகள் முதலியனவாகும். இவையும் சந்தர்ப்பத்திற்கேற்ப தீண்டும். சில நீர்ப் பாம்புகள் நீரிலும், நிலத்திலும் வசிக்கக் கூடியதாக உள்ளன. நீர் நிலைகளுக் கருகாமையிலுள்ள மரங்களிலும் சில சீவிக்கும். இவை உருவத்தில் பருத்தனவாக இருக்கும். நீர்ப்பாம்புகள் மனிதரை அதிகமாகத் தீண்டும் சந்தர்ப்பம் குறைவாகவே இருக்கும். காரணம் மனிதன் அவ்விடங்களில் அதிகமாகச் செல்வதில்லை. நீர் நிலைகளில் பாம்பைவிட ஜந்துக்களும் உண்டு.

-ஈழநாடு.

★

## வலங்கிமான் டி. மு. கோ

**I. A. 532/62 in O. S. 130/1962**

கும்பகோணம் தாலூகா கோவனூர் கிராமத்தில் இருக்கும் பிடாரி ஐயனார் இரு கோவில்களுக்கும் டிரஸ்டி முறையில் ஷையூர் சிவசாமி படையாச்சி 1. ராமமூர்த்தி படையாச்சி 2, பக்கிரி படையாச்சி 3, காளிமுத்து படையாச்சி 4, ரெங்கசாமி படையாச்சி 5, — வாதிகள்

ஷை ஷை இருகோவில்கள் ஷையூர் குளங்களில் பாசி/மீன்/பிடித்து அடையும் பாத்தியதையை ஆட்சேபிக்கிற ஷை கோவனூர் கிராம எல்லா கிராமவாசிகளுக்காகவும் Represent செய்து அவர்களுக்காக ஷை யூர் சாரங்கபாணி அய்யங்கார் 1, பாட்டு படையாச்சி 2, தம்பிராஜ படையாச்சி 3, —பிரதிவாதிகள்.

ஷை நம்பர் வாதிகளால் பிரதிவாதிகள் பேரில் ஷை கோவனூர் கிராமத்தில் உள்ள 1, புதுக்குளம் 2, சருப்பங்கண்ணி 3, பிள்ளையார் கோவில் குட்டை 4, கொல்லன் குட்டை என்கிற பிடாரி கோவில் குட்டை ஆக, 4 குளம் குட்டைகளில் உள்ள பாசி/மீன்/களை பிடித்தும் வசூலித்தும் அடைய உள்ள பாத்தியம் ஷை வாதிகள் இரு கோவில்களும் சொந்தமென்று டெக்லரேஷன் பிரகாரம் கிடைக்கவும் அதில் பிரதிவாதிகள் தடுக்காதபடி பர்மனெண்டு இன்ஜெங்ஷன் கிடைக்கவும் தாவா செய்து ஷை தாவாவில் ஐ. ஏ. 535/62ல் பிரதிவாதிகளை ஷை கோவனூர் கிராமத்தில் ஷை பாத்தியதை ஆட்சேபிக்கக்கூடிய எல்லா கிராம வாசிகளுக்காகவும் பிரதிவாதிகளை Represent செய்து ஸி. பி. ஸி. ஆர்டர் 1 ரூல் 8 படி பர்மிஷன் கொடுக்க மனு கொடுத்தும் ஷை மனுவில் கோர்ட்டாரவர்களால் சென்ற 21-3-62 ல் ஷை பிரதிவாதிகளுக்கு நோட்டீசும் ஜெனறல் நோட்டீசும் ஷை கோவனூர் கிராமத்தில் தண்டோரா மூலம் பிரசுரம் செய்யவும் கோர்ட்டு நோட்டீஸ் போர்டில் ஒட்டவும் உத்தரவு செய்து வருகிற 16—6—62ல் ஷை கோர்ட்டில் பகல் 10 மணிக்கு ஈரங்கி. ஆட்சேபனை உள்ள ஷை கிராம வாசிகள் அன்று ஷை கோர்ட்டில் ஆஜராகித் தெரிவிக்கலாம்.

வி. கல்யாணம் அய்யர்,
3/4979/22 வாதிகள் அட்வகேட்.

நாடக விமர்சனம்

# வீரபாண்டிய கட்டபொம்மன்

திருவரங்கம் திருவானைக்கா கலை மன்றத்தினர்சென்ற ஞாயிறு அன்று திருவரங்கம் வாசுதேவ மன்றத்தில் வீர பாண்டிய கட்டபொம்மன் நாடகத்தை நடத்தினர். தெரிந்த வரலாறுதான் என்றபோதிலும், மிகச் சிறந்த முறையில் வசனத்தையும் நாடக அமைப்பையும் திரு. ஆர். கே. மூர்த்தி அவர்கள் அமைத்திருந்தார்.

இந் நாடகத்தில் முதலிடம் பெறத்தக்க முறையில் மிகவும் உயர்ந்த முறையில் நடித்தவர் வெள்ளையத் தேவனாக பாத்திரமேற்ற மேலூர் திரு. வரதன். இவர் திருவரங்கம் நகராட்சிப் பொதுத் துறைப் பிரிவில் குமாஸ்தாவாகப் பணியாற்றுபவர். இவரது வீரம் ததும்பிய உணர்ச்சி மிக்க பேச்சும், சமயத்திற்கு தகுந்த முகபாவமும் புகழத்தகுந்தது. இவருக்கு அடுத்தபடியாக பாராட்டைப் பெற வேண்டியவர் கட்டபொம்மனை நடித்த திரு. பெ. மாமுண்டியா பிள்ளை. இவர் சுகாதார ஆய்வாளராக திருவரங்கத்தில் பணிபுரிகிறார். புலி பதுங்குவது பயத்தால் அல்ல, பாய்வதற்காகத்தான் என்பதுபோல இவர் முதலில் சில காட்சிகளில் ஒன்றுமே தெரியாதவர் போல பொறுமையைக் கடைப்பிடித்து பின்னர் ஜாக்சன் துரையை பேட்டி காணச் சென்றது முதல் இறுதி வரை மிக்க வீராவேசத்துடன் உணர்ச்சிவயப்பட்டு வெகு சிறப்புடன் தக்க முகபாவனையுடன் நடித்தது மிகவும் பாராட்டிற்குரியது.

கட்டபொம்மன் கொலு மண்டப அமைப்பும், மன்னர் வீற்றிருந்த விதமும் பலேஜோர். முருகன் கோவிலில் கட்டபொம்மன் பாடிய 'தமிழ்த் தெய்வமே' என்ற பாடல் கடவுள் பக்தியற்றவரையும் உள்ளமுருகச் செய்யும் வண்ணம் அமைந்தது குறித்து பாடலைப் புகழ்வதா, பாடிய குரலின் இனிமையையும் குழைவையும் நேர்த்தியையும் புகழ்வதா, மெட்டு அமைத்தவரைப் புகழ்வதா என்பதே தெரியவில்லை. அவ்வளவு சிறப்புடன் அமைந்திருத்தது அக் காட்சியும் பாடலும்.

வெள்ளையம்மாவாக நடித்தவர் காதல் காட்சியில் சோபித்த அளவு சோகக் காட்சியில் நடிப்பு உள்ளத்தை உருக்கும் வகையில் அமையவில்லை. அடுத்து ஜாக்சன் துரையாக நடித்தவர் பாராட்டுக்குரியவர். ஊமத்துரையாக நடித்தவரின் நடிப்புபாதிகட்டத்திற்கு மேல்தான் சிறப்பு பெற்றது. ஊமத்துரையாக நடித்தவர் மேலூர் திரு. சீனிவாசன் அவர்கள். இவர் பள்ளி ஆசிரியர். இதர நடிகர்களும் நன்கு நடித்தனர். இந் நாடகத்திற்கு முக்கிய காரணகர்த்தாவாகிய டைரக்டர் திரு. வி. கே. சீனிவாசனின் ஒப்பனை மிகவும் அருமையாக இருந்தது.

பின்னணி இசைக் குழுவினரை நாம் மறப்பதற்கில்லை. அவர்களது இசையின் மேன்மையால் நாடகம் மேலும் பொலிவு பெற்றது.

திருவரங்கம் நகராட்சி சிப்பந்திகளால் நடிக்கப்பெற்ற இந் நாடகம் மிகுந்த பாராட்டுகளைப் பெற்றது. இது போன்ற நல்ல உயர்ந்த நாடகங்களை அமைத்து தமிழகத்தின் பெருமையை வளரச்செய்து கலை வளர்ச்சிக்கு பேருதவி செய்வது தமிழ் மொழிப் பற்றுள்ளோரின் தலையாய பணியாகும். ஃ

# விவசாயிகளுக்கு...

முறைப்படி நிலத்தின் மீதும் பயிரின் மீதும் கவனம் செலுத்தினால் நெல்லில் அமோகமான விளைச்சலைக் காணலாம். இதற்காக விவசாயி தங்கள் சக்தியை மீறிய ஒன்றையும் செய்யத்தேவையில்லை. மழை ஏராளமாகப் பெய்யும் மேற்கு கடற்கரையில் உள்ள தாழ்ந்த ரக நிலங்களில் கூட இது உண்மை என்று பல விவசாயிகள் உணர்ந்துள்ளார்கள்.

கேரள மாநிலத்தில் திருவனந்தபுரத்திற்கருகில் உள்ளூர் என்று ஒரு கிராமம். இங்கே நிலம் செம்மண் நிலம். இந்த வகை நிலத்திலிருந்துகூட கிருஷ்ணன் நாயர் என்பவர் நிலத்துக்கும் பயிருக்கும் செலுத்தும் கவனத்தால் ஏராளமான நெல் மகசூலை அடைந்து வருகிறார்.

அவருக்கு ஐந்து எக்கர் நஞ்சை. எக்கருக்கு சாதாரணமாக இந்நிலம் 1500 ராத்தலுக்குமேல் நெல் விளைவதில்லை. இப்போது அவருடைய வயலில் எக்கருக்கு 6000 ராத்தல் நெல் விளைவது சகஜமாகிவிட்டது. நல்ல பருவகால நிலை நிலவினால் எக்கருக்கு 6500 ராத்தல் அறுவடை செய்தாலும் ஒருவரும் இதைப்பற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை.

இவ்வாறு மகசூல் அதிகரிக்க தனக்கு புதுமுறைகளை கற்றுக்கொடுத்தவர்கள் விவசாய அதிகாரிகள் தாம் என்று அவர் கூறுகிறார். நாட்டுக் கலப்பைக்கு பதிலாக இரும்புக் கலப்பையை அவர் பயன்படுத்துகிறார். ஜப்பானிய ஹோவையும் அவர் பயன் படுத்துகிறார். இதை களையெடுக்கவும் மண்ணைக்கிளறி விடவும் உபயோகிக்கிறார்.

யூ. ஆர். 19, பி.டி.பி. 4 வகை விதைகளை அவர் விதைத்தார். இவை நிரம்ப விளையும் வகைகள். விதைப்பதற்கு முன்னால்விதைகளை அர்கோஸான் ஜி.என். மருந்தைக் கலந்து தாமிர பூஞ்சணக் கொல்லி மருந்திலும் நாற்றுகளை நடவுக்குமுன் அமுக்குவது இவர் வழக்கம். இதனால் நோய்கள் பயிரை அண்டுவதில்லை.

கடற்கரை நிலங்களில் கரிம எருக்களின் சத்து நீடித்து நிலைத்து இருப்பதில்லை. இங்கே அதிகமாக மாட்டு எருவும் கிடைப்பதில்லை. ஆகையால் நாயர் கிளைரிசிடியாவை வளர்த்து அதன் தழைகளை உரமாக உபயோகப்படுத்துகிறார். தென்னந்தோட்டத்தில் உள்ள இடைவெளிகளிலும் வரப்போரங்களிலும் இவர் கிளரிசிடியாவைப் பயிரிடுகிறார். கிடைக்கும் மாட்டு எருவுடன் கிளரிசிடியா தழையைக் கலந்து நிலத்துக்குப் போடுவதால் போதுமான உரம் கிடைத்து வருகிறது. நடவின்போது 112 ராத்தல் நெல்லுக்கான கலவை உரத்தைப் போடுவார். 30 நாட்கள் கழித்து 56 ராத்தல் உர மருந்து போடுவார். பூக்கட்ட 30 நாட்கள் இருக்கு முன்பு மறுபடி 56 ராத்தல் போடுவார்.

இந்த முறைகளைப் பின்பற்றுவதால் நாயருக்கு சீராக உயர்ந்த மகசூல் கிடைத்துக் கொண்டு வருகிறது.

வரிசை நடவு செய்வதால் களையெடுப்பதும் மண்ணைக் கிளறிவிடுவதும் ரோட்டரி ஹோவைக் கொண்டு எளிதாக இருக்கிறது. இதனால் களையெடுப்புக் கூலியில் சிக்கனமும் ஏற்படுகிறது.

தென்னந்தோப்பையும் அவர் நன்கு பரிபாலிப்பதால் நல்லஇலாபம் அடைந்து வருகிறார். அவருக்கு உள்ளவை 5000 மரங்கள். இவை மரம் ஒன்றுக்கு சராசரி ஆண்டு ஒன்றுக்கு 2 லிருந்து 5 வரைதான் காய்களைத் தரும். இப்போது ஒவ்வொரு மரமும் 50—60 காய்கள் தருகின்றன.

எருவிட்டு செய் நேர்த்திகளைச் செய்வதால்தான் நெல் போல தென்னையும் நல்ல பலனை அளிக்கிறது. மரம் ஒன்றுக்கு 50 ராத்தல் வீதம் கிளரிசிடியா தழை போடுகிறார் நாயர். மேலும் மரம் ஒன்றுக்கு 6 ராத்தல் தென்னை மரத்துக்கான உரக் கலவையை நாயர் இடுகிறார். கருவண்டு தென்னையைப் பாதிக்காமல் கொக்கி போட்டு வண்டுகளை எடுத்து ஒழித்துவிடுகிறார்.

நாயரைப்போல் எத்தனையோ விவசாயிகள் நிலத்தை நன்கு பராமரிப்பதால் நல்ல பலன் அடைந்திருக்கிறார்கள்.

★



களையெடுக்கும் கருவியைப் பயன்படுத்தி அதிகமான அறுவடை செய்யுங்கள்.

| Corresponding figures 31-12-60 | | | Rs. nP. | Rs. nP. |
|---|---|---|---|---|
| | Dividend | 6,000 00 | | |
| | Donation | 300 00 | | |
| | Bad and doubtful debts | 4,727 15 | | |
| | Reserve | Nil | | |
| | Incometax Provision | 6,500 00 | | |
| 17,527 | | | 17,527 15 | |
| | Add: Profit for the year as per profit and loss statement attached ... | | | 16,612 38 |
| | 10. CONTINGENT LIABILITIES ... | | Nil | |
| 11,74,242 | TOTAL ... | | | 12,07,836 90 |

## PARTICULARS OF ADVANCES

| Corresponding figures 31-12-60 Rs. | | Rs. nP. |
|---|---|---|
| 7,48,264 | (i) Debts considered good, in respect of which the Banking Company is fully secured ... | 6,79,887 00 |
| 5,000 | (ii) Debts considered good for which the Banking Company holds no other security than the personal security of the debtor ... | Nil |
| | (iii) Debts considered good secured by the personal liabilities of one or more parties in addition to personal security of the debtors ... | Nil |
| 3,670 | (iv) Debts considered doubtful or bad, not provided for... | Nil |
| | (v) Debts due by Directors or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons ... | Nil |
| | (iv) Debts due by Companies or firms in which the directors of the Banking Company are interested as Directors Partners or Managing Agents or in the case of Private Companies as Members. ... | Nil |
| | (vii) Maximum amount of total advances including temporary advances made, at any time during the year to directors or managers or officers of the Banking company or any of them either severally or jointly with any other persons ... | Nil |
| | (viii) Maximum amount of total advances including temporary advances granted during the year to companies or firms in which Directors of the Banking Company are interested as directors, partners or Managing Agents or in the case of Private Companies as members ... | Nil |
| | (ix) Debts due by Banking Companies ... | Nil |
| | | 6,79,887 00 |

(Sd) ப. அ. ராஜு செட்டி,
President.

Coimbatore }
27-3-1962 }

# Profit and Loss Account for the year ended 31st December 1961.

| Corresponding figures 31-12-60 | EXPENDITURE | Rs. nP. |
|---|---|---|
| Rs. | | |
| 45,323 | 1. Interest paid on deposits and borrowings ... | 51,525 75 |
| | 2. Salaries and allowances and Provident Fund: | |
| 29,065 | ( to staff ) to Hon. Secretary Nil | 25,049 58 |
| 160 | 3. Directors and Local Committee Members, Fees and Allowances ... | 360 00 |
| 5,700 | 4. Rents, Taxes, Insurances, Lighting etc. ... | 6,018 77 |
| 150 | 5. Law Charges ... | 150 00 |
| 484 | 6. Postage. Telegrams and Stamps ... | 473 01 |
| 300 | 7. Audit Fees ... | 300 00 |
| 340 | 8. Depreciation and repairs to the Banking Company's Property ... | 300 00 |
| 1,572 | 9. Stationery, Printing, Advertisement etc. ... | 2,232 68 |
| Nil | 10. Loss from sale of or dealing with non-banking assets ... | 1,973 25 |
| 4,089 | 11. Other Expenditure ... | 9,540 79 |
| 14,386 | 12. Balance of Profit ... | 16,612 38 |
| 1,01,569 | TOTAL ... | 1,14,536 21 |

| Corresponding figures 31-12-60 | INCOME (Less Provision made during the year for bad and doubtful debts and other usual necessary provisions) | Rs. nP. |
|---|---|---|
| Rs. | | |
| 98,740 | 1. Interest and Discount ... | 1,09,807 77 |
| 2,819 | 2. Commission, Exchange and Brokerage ... | 4,678 73 |
| Nil | 3. Rents ... | Nil |
| Nil | 4. Net Profit on sale of Investments, Gold and Silver, Land, Premises and other Assets ... | Nil |
| Nil | 5. Net profit on revaluation of investments, Gold, Silver, Land, Premises and other Assets ... | Nil |
| Nil | 6. Income from Non-Banking Assets and Profit from sale of or dealing with such assets ... | Nil |
| 10 | 7. Other Receipts ... | 49 71 |
| Nil | 8. Loss ( if any ) ... | Nil |
| 1,01,569 | TOTAL ... | 1,14,536 21 |

COIMBATORE }
27-3-62. }

ப. அ. ராஜு செட்டி,
President.

DIRECTORS:

T. K. Bangarukrishnan, R. Krishnan, A. பட்டாபிராம செட்டி,
K. M. Ranganathan, K. B. Ramanathan.

S. Padmanabhan,
Hon. Secretary.

**AUDIT REPORT**: I have audited the Profit & Loss Account of the COIMBATORE BAGHIALAKSHMI BANK LIMITED, for the year ended 31-12-61 and also the Balance sheet as on that date and report that :— 1. In accordance with the provision of section 29 of the Banking Companies Act, 1949, read with the provisions of sub section (1) and (2) of section 211 and sub section (5) of section 211 and 277 of the Companies Act, 1956, the Balance Sheet and Profit and Loss Account are not required to be drawn up in confirmity with Schedule VI of the Companies Act, 1956. The accounts are therefore drawn up in Conformity with Forms A and B of the third Schedule to the Banking Companies Act, 1949. 2. I have obtained all the information and explanations which, to the best of my knowledge and belief, were necessary for the purpose of my audit and I have found them to be satisfactory. 3. That the transactions which have come to my notice have been within the powers of the Bank. 4. In my opinion proper books of account as required by Law have been kept by the Bank so far as appears from my examination of those books 5. That the Profit and Loss Account dealt with by this report are in agreement with the books of account. 6. In my opinion and to the best of my information and explanations given to me, the said accounts give the information required by the Companies Act, 1956 in the manner so required for the Banking Companies and on such basis the said Balance Sheet gives a true and fair view of the state of affairs of the Bank as at 31-12-1961 and the Profit and Loss Account gives a true and fair view of the Profit for the year ended on that date.

Coimbatore, }
27-3-62 }

C. V. V. Raghavan, G. D. A., F. C. A.,
Chartered Accountant.

# ஹோமியோ கல்லூரி

"சமீபத்தில் கும்பகோணத்தில் நடைபெற்ற அகில இந்திய ஹோமியோபதியர்கள் பேரவையில், தமிழகத்தில் ஒரு ஹோமியோபதி கல்லூரி ஏற்படுத்த தனி நபர்கள் முன்னுக்கு வர வேண்டும் என்றும், இதற்கு அரசாங்கம் மான்யங்கள் வழங்கி உதவி செய்யும் என்றும் தமிழக சுகாதார அமைச்சர் அவர்கள் அறிவித்து, இவ்விஷயத்தில் அவசியமான முயற்சிகளை மேற்கொள்ளுமாறு எனக்கு ஆலோசனையும் கூறியிருக்கிறார்கள். இதை அறிந்த ஏராளமான அன்பர்கள் இது சம்பந்தமாக நான் என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்துள்ளேன் என்ற விவரம் கோரியும், மேலும் தங்கள் மேலான ஆலோசனைகளைக் கூறியும் என்னை இவ்வகையில் ஊக்குவித்து வருகின்றனர். ஆரம்பிக்கப்பட இருக்கும் கல்லூரியின் வளர்ச்சிக்காக ஏராளமான நன்கொடைகளும், மற்றும் பொருளாதார உதவிகளும் செய்வதற்கு அனேக நண்பர்கள் முன்னுக்கு வந்துள்ளனர்.

இது சம்பந்தமாக சென்னை ராஜ்யத்திலுள்ள பிரமுகர்கள், வள்ளல்கள், மற்றும் வணிகப் பெருமக்கள் கொண்ட ஒரு பூர்வாங்க கூட்டத்தை இந்த ஜூன் மாத வாக்கில் சென்னையில் கூட்டலாமென்று உத்தேசித்துள்ளேன். ஆஸ்பத்திரியுடன் இணைந்த ஒரு ஹோமியோபதி கல்லூரியை நிறுவி நடத்தி வருவதற்கு சென்னைராஜ்ய ஹோமியோபதிக் கல்விக் குழு என்ற ஒரு நிறுவனம் இக்கட்டத்தில் அமைக்கப்படும். தமிழக மக்கள் அனைவரின் நன்மைக்கும் ஏதுவாகிய இத்திட்டம் சரியான வலுவான அடிப்படையில் அமைக்கப்படவேண்டும் என்பது என் எண்ணம். அரைகுறையாகக் காரியங்களைச் செய்வதில் நன்மை இல்லை அல்லவா?

தமிழகத்தில் ஹோமியோபதியின் வளர்ச்சியில் அக்கறையுள்ள அன்பர்கள் அனைவரும் இவ்வகையில் தங்கள் அரிய ஆலோசனையையும், உதவியையும் எனக்கு நல்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

உத்தேச பூர்வாங்கக் கூட்டம் எங்கு, எப்பொழுது நடத்தப்பெறும் என்பது நிச்சயிக்கப்பட்ட பிறகு தனித்தனியாகவும், பத்திரிக்கைகள் வாயிலாகவும் அன்பர்களுக்கு அழைப்பு அனுப்பி வைக்கப்பெறும்" என்று கும்பகோணம் இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட் மானேஜிங் டைரக்டர் டாக்டர் வி. ஆர். மூர்த்தி அவர்கள் விடுத்துள்ள அறிக்கை தெரிவிக்கிறது.

★

**திருவாரூர் டி. மு. கோ**
**S. C. 20/62**

நாகப்பட்டினம் தாலூகா விஜயபுரம் K.T.R. கோபாலகிருஷ்ண ராஜா —வாதி

கஸ்பா திருவாரூர் தெற்கு வீதி R. சிங்கராயர் பெண் செல்வமணி —2ம் பிரதிவாதி

வாதி 2ம் பிரதிவாதியின் தந்தை இறந்த R. சிங்கராயரால் எழுதிக் கொடுக்கப்பட்ட பிராம்சரி நோட்டின் பேரில் தாவா செய்து 2ம் பிரதிவாதிக்கு சம்மனை ஒட்டி சர்வு செய்யவும் பப்ளிகேஷனுக்கும் உத்திரவாகி 8—6—62ல் ஏராங்கி. அன்று காலை 10 மணிக்கு கோர்ட்டில் ஆக்ஷேபனையை தெரிவிக்காவிடில் exparte செய்யப்படும்.

M. ராம்தாஸ்,
அட்வகேட்.

2 | 4977 | 21

Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Single copy six nP. ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS: For INDIVIDUALS Rs. 5. For INSTITUTIONS Rs. 10